# மூலிகை மணி



வேலூர் மருத்துவர்:- ஆ. இரா. கண்ணப்பர்

(186-வது மூலிகை) ஆடி மீ 9 [விலை 50 காசு]



மூலிகை வளமே! உ நாட்டு வளம்!

# 'மூலிகை மணி'

தமிழ் மருத்துவத் திங்கள் இதழ்

ஆசிரியரும் வெளியிடுபவரும்

தினமணி புகழ்

வேலூர் மருத்துவர் ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.

ஆண்டு சந்தா ரூ. 6-00 தனி இதழ் 0-50

## ஆடி இதழில்

சிறப்பு கட்டுரைகள்

| | | |
|---|---|---|
| 1 | அமைச்சருடன் அரைமணி நேரம்—தலையங்கம் | ... 3 |
| 2. | நிலாவிரை—நம் நாட்டு மூலிகைகள் | ... 6 |
| 3. | நோயும் மருந்தும்—கேள்வி பதில் | ... 11 |
| 4. | மீன்களில் பாதரசம் சேர்க்கை | ... 17 |
| 5. | மூலிகை ஆய்வு | ... 22 |
| 6. | நோயும் தன்மையும் | ... 28 |

மற்றும் தொடர்கட்டுரைகள்

## மூலிகை மணி சந்தா விபரம்

| உள்நாடு | மலேஷியா, சிங்கைக்கு |
|---|---|
| 1 ஆண்டு 6-00 | கப்பல் வழி 10-80 விமான மூலம் 18-00 |
| 3 ஆண்டு 18-00 | கப்பல் வழி 32·40 விமான மூலம் 54-00 |
| ஆயுள் சந்தா ரூ. 150 | ஆயுள் சந்தா ரூ. 150 (கப்பல் மூலம்) |

தலைமை அலுவலகம்: மூலிகைமணி வேலூர் - 632001

சென்னை அலுவலக முகவரி: மூலிகைமணி, 7, அருளாம்பாள் தெரு, தி நகர் சென்னை - 600017.

தொலைபேசி: 445689 (சென்னை)

உ

முருகன் துணை

# குன்றிருக்கும் இடமெல்லாம் குடியிருப்பான்



மலைமீதில் குடியிருக்கும் மன்னவன்—என்
மனமீதில் குடியிருக்கும் முருகனவன்
மயில்மீதில் ஏறிவரும் அழகனவன்
மக்கள்குறை தீர்த்துவாழவைக்கும் தெய்வமவன் (மலை)

நாலுதலை கொண்டவனைச் சிறையில்வைத்து
ஐந்துதலை அப்பனுக்கும் பாடஞ்சொன்னன்
ஆறுதலை கொண்டவனை அடிபணிந்தால்—நம்
ஏழுதலை முறைகளையும் வாழவைப்பான் (மலை)

யானைமுக கணபதிக்குத் தம்பியவன்
சிங்கமுகச் சூரனுக்குக் காலனவன்
மரமாகி மாயஞ்செய்த அசுரனையும்
மயிலாக்கி வாகனமாய் கொண்டவனும் (மலை)

குன்றிருக்கும் இடமெல்லாம் குடியிருப்பான்
குறவர்குல வள்ளிநங்கை கணவனவன்
தோளிரண்டில் காவடியைத் தூக்கிவைத்து
தேவானை கணவனுக்கு ஆட்டம் செய்வோம் (மலை)

—த. அமிர்தலிங்கம் எம்.ஏ.

உ

முருகா

ஐந்துகரத்தனை யானைமுகத்தனை இந்தினிளம்பிறை போலுமெயிற்றினை
நந்திமகந் தனைஞானகொழுந்தனைபுந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே




எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே. —(தாயுமானவர்)

மலர் 11] இராட்சச ஆடி மீ ஜூலை 75 [இதழ்-9

# அமைச்சருடன் அரைமணி நேரம்

—க. வே.

அண்மையில் அமைச்சர் பேராசிரியர் அன்பழகருடன் ஓர் அரை மணி நேரம் உரையாடும் வாய்ப்பு கிட்டியது. அவரின் உள்ளம் திறந்த பேச்சு சித்த மருத்துவத்தின் எதிர்கால வளர்ச்சியைத் தெளிவாக காட்டியது. அவற்றை வாசகர்கட்கு அறிவிப்பதில் அக மகிழ்ச்சி அடைகிறேன்.

''சித்த மருத்துவத்தை இன்னும் 20 ஆண்டு காலத்திற்குள் சீர் படுத்தப்படாவிட்டால் அம் மருத்துவத்தை யாரும் நம்பவும் மாட்டார்கள் பின்பற்றவும் மாட்டார்கள், எனவே எவ்வளவு விரைவில் இந்த மருத்துவத்தைச் செம்மைப்படுத்துகிறோமோ, அவ்வளவு விரைவில், இதன் வாழ்வு—வளர்ச்சி பெறும்.'' என்று அவர் கூறிய கருத்து, அவர் கால வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு, சித்த மருத்துவத்தை எவ்வளவு தூரம் முன்னேற்றவேண்டும் என்பதை உணர்ந்து, நமக்கும் உணர்த்தியிருப்பது; ஒவ்வொரு சித்த மருத்துவரின் கவனத்திற்குரியதாகும். இனி மேலும் அசட்டையாயிராமல், சித்தமருத்துவர்கள், தம்முடையஅனுபவ உண்மைகளை உலகுக்கு அறிவிக்க வேண்டும்.

அடுத்து, சித்த மருத்துவ நூல்களைப்பற்றி அமைச்சர் கூறிய கருத்து போற்றுதற்குரியதாகும்.

எண்ணிறந்த சித்த மருத்துவ நூல்கள், தொகுப்பாரும், தொடு வாருமின்றி சிதறிக் கிடக்கின்றன. இவற்றை இதுகாறும் யாரும் தொகுத்து வெளியிடாத காரணத்தால் பல நூல்களின் பெயர்கள் தெரி கின்றன. ஆனால் மூல நூல்கள் கிடைக்கவில்லை. இழந்ததை தேடிப் பதிப்பதும், இருப்பவற்றை இழக்காமல், காக்கவும், முதலில் அவசர நடவடிக்கை எடுக்க வேண்டும்.

"என்னிடத்தில் பணம் இருந்தால் எல்லா சித்த மருத்துவ நூல்களையும் 'Micro-film' எடுத்து காலத்தால் அழிக்க முடியாத வாறு செய்து விடுவேன்." என்று கூறியபோது, 'சித்தமருத்துவத்தை வாழ்வளிக்கவந்த வள்ளலாகவே' காட்சி தருகின்றார்.

இவ்வகையில் வெறும் வார்த்தை அளவில், இக்கருத்தை தெரிவிக்காமல் "ஆண்டுதோறும் 50000 ரூபாயை, சித்த மருத்துவ நூல் பதிப்பிற்காக ஒதுக்கி அது கடந்த பட்ஜெட் ஆண்டு முதல் நடந்தும் வருகிறது இது தவிர, அருள்மிகு பழனி தண்டபாணி தேவஸ்தானத்திடம் வேண்டி, ரூ. 2 இலட்சத்தை நன்கொடையாகப்பெற்று, இதுவரை ஏறக் குறைய 12 நூல்கள் அச்சாகி, விரைவில் அவைகளை வெளியிட ஏற் பாடுகள் நடந்து வருகின்றன.

தமிழிலக்கியத்தின் தன்னிகரற்ற நூல்களாகிய சங்க இலக்கியங்களைக் கண்டுபிடித்து பதிப்பித்தவர் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர். அன்று அவர் அப்பணியை செய்திராவிடில், நம் இலக்கியம் தாழ்வுற்றிருக்கும். அதுபோல், தமிழ் மருத்துவ நூல்களைப் பதிப்பிக்கும் அரிய பணியை அமைச்சர் அன்பழகர் மேற்கொண்டு நடத்தி வருவது, தமிழ் மருத்துவ எதிர்கால, வரலாறு,

அமைச்சர் அன்பழகரை 'தமிழ் மருத்துவ உலகில் ஒரு சாமிநாதய்யர்' என்று நிச்சயம் குறிப்பிடும்.

வாழ்க அன்பழகர் திரு உள்ளம்

வளர்க அவர் நற்பணிகள்!



# குழந்தைகளை ஐந்து வயதுக்குள் பள்ளிக்கு அனுப்பாதீர்கள்

அண்மையில் டெல்லியில் உள்ள பிரபல கண் மருத்துவர் ஒருவர் தன் ஆய்வுக் கருத்தாக, கீழ்க்கண்ட முடிவைத் தெரிவித்துள்ளார்.

5 வயதுக்குட்பட்ட குழந்தைகளைக் கல்விச் சாலைகளுக்கு அனுப்பு வதால், கண்கள் முதிர்ச்சியடையாத காரணத்தால், விரைவில் கண் பார்வை குறைவதாகவும், ஐந்து வயதுக்குப் பிறகுதான், கண்கள் முதிர்ச்சி அடைவதால் ஐந்து வயதுக்குப் பிறகே பள்ளிக்கு அனுப்புதல் நல்லது என்றும் மேலும் குறிப்பிட்டுள்ளார்.

மூன்று வயதானவுடன் 'கிண்டர் கார்டன்' வகுப்பு அனுப்பும் பெற் ரோர்கள் இக்கருத்தை சிந்திக்கவும். அக்காலத்தில் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்க ஒரு தேர்வு செய்வார்கள். குழந்தையின் வலது கையை, இடது காது தொடும்படி செய்து, காது எட்டினுல் பள்ளியில் சேர்ப்பார்கள். காது கைக்கு எட்டாவிடில், பையனுக்கு இன்னும் 5 வயதாகவில்லை, எனவே, அடுத்த ஆண்டு அழைத்து வாருங்கள். பள்ளியில் சேர்த்துக்கொள்ளலாம் என்று கூறுவார்கள்.

பழங்காலத்து நடைமுறைகள் எவ்வளவு நன்மை தருபவை என்பது தற்கால அறிவியல் உண்மைகளை நிருபித்து வருவது எவ்வளவு வியப்பாக உள்ளது!

இன்று பெரும்பாலும் 10 வயதுக்குட்பட்ட குழந்தைகள் 100க்கு 50 சதவீதம் கண்ணுடி அணிபவர்களாக இருப்பதற்குக் காரணம், இக் குழந்தைகளின் கண்கள் முதிர்ச்சி அடையாத காலத்தில் பள்ளிக்கு அனுப்பியிருப்பது காரணமாக இருக்கக்கூடும்.

எனவே, குழந்தைகளின் உடல்நலம் கருதியாவது, இனி வருங்காலத் தில் 5 வயது முடிந்த பின்னரே, பள்ளியில் சேர்க்குமாறு பள்ளிகளுக்கு ஆலோசனை வழங்கிட அரசு ஆவன செய்யவேண்டும். ஊனக் கண்ணை இழந்தால் கல்விக் கண் சிறக்காது அல்லவா?

உ

முருகா




# நிலா விரை

## [186-வது மூலிகை]

நம்மில் சிலர் அடிக்கடி வெளிநாடு சென்று பணம் சம்பாதித்து வருவர். எல்லோருக்கும் வெளிநாடு சென்று சம்பாதிக்க முடிவதில்லை.

மூலிகை இனங்களிலும் இந்நிலை உள்ளது. சர்ப்பகந்தி, நித்ய கல்யாணி, போன்ற மூலிகைகள் ஏராளமாக வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, அதன்மூலம் இந்திய அரசுக்கு அந்நியச் செலாவணி கிடைக்கிறது. மக்களின் நீடிய நல்வாழ்வுக்காகப் பயன் படும் மூலிகைகள், நம் நாட்டுப் பொருளாதார வளர்ச்சிக்குப் போதிய அளவு நிதியையும் பெற்றுத் தருகிறது.

இரு வகையில் பயன்படும் இத்தகைய மூலிகைகளில் சிறப்பான இடம் பெற்றது, 'நிலாவிரை'. இந்தியாவிலிருந்து ஏராளமான அளவில் ஏற்றுமதியாகும் மூலிகை நிலா விரை. மிகச் சிறப்பான மருத்துவ குணங் களை உடையது. அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

### நிலாவிரை—பொதுச் செய்திகள்

சுமார் 2 முதல் 2½ அடி உயரம் வரை வளரக்கூடிய குத்துச் செடி இனத்தைச் சார்ந்தது நிலாவிரை. தென்னிந்தியாவில் மிகச் சிறப்பாக, திருநெல்வேலி மாவட்டத்தில் மிக அதிக அளவில் பயிராகின்றது. இலை கள் இரண்டு இரண்டாகச் சேர்ந்து கூட்டிலைகளாகக் காணப்படும். 1 முதல் 2 அங்குலம் வரை நீளமும் கால் அங்குலம் முதல் அரை அங் குலம் வரை அகலமும் உடையதாயிருக்கும், வெளிப்பச்சை நிறமாக

வண்ணம் கொண்டிருக்கும். இவ்விலைதான் மருத்துவத்திற்குப் பெரிதும் பயன்படுத்தப்படுகிறது.

நிலாவிரையின் விதையும் மருந்தாகப் பயன்படுகிறது. கால் அங்குல அளவு உடைய இதன் விதை பசுமை கலந்த பழுப்பு நிறத்தில் காணப் படும். தென்னிந்தியாவில் நிலாவிரை புன்செய்ப் பயிராகவும், நெல் விளைந்த பின் பயிரிடப்படும் செடியாகவும் உற்பத்தி செய்யப்படு கின்றது.

## வகை—தொகை

நிலாவிரை—இருவகைப்படும். சீமை நிலாவிரை, 2. சூரத் நிலா விரை அல்லது சென்னாமுக்கி எனப்படும். தென்னிந்தியாவில் விளைவது சென்னா எனப்படும். இரண்டிற்கும் அமைப்பில் சிறிது வேறுபாடு இருந் தாலும், குணத்தில் செய்கையில் ஒற்றுமை உண்டு எனலாம்.

## நிலாவிரை—சுத்திமுறை

இந்த மூலிகையை அப்படியே பயன்படுத்தக் கூடாது. இதனைக் கொண்டு வந்து கல், மண், காய், காம்பு இவைகளைக் களைந்துவிட்டு இலைகளை மாத்திரம் எடுத்து, பாலில் பிட்டவியல்போல் செய்து, நிழலில் உலர்த்தி எடுத்து பத்திரப் படுத்தவும்.

சுத்தி செய்யாமல் இதன் இலைகளைப் பயன்படுத்தினால், குமட்டல், வயிற்றுவலி ஆகியன ஏற்படும்.

## நிலாவிரை—பொதுக் குணம்

இதன் இலை மட்டும் பெரிதும் மருந்தாகப் பயன்படுகிறது. வெகுட் டல் கைப்பு ருசி உடையது. வெப்பத்தை உண்டாக்கும். மலச்சிக்க லைப் போக்கும். பேதி மருந்தாகப் பயன்படுகிறது. பெருங்குடலில் ஏற் படும் அலைபோன்ற இயக்கத்தை அதிகப்படுத்தும் (Peristalsis) வயிற்றை முறுக்கி ஏற்படும் வலியைக் குறைக்கும். ஐந்து ஆண்டுகள் கழிந்தாலும் கூட இவ்விலையில் மருத்துவ தன்மை குறைவதில்லை.

**மருத்துவ முறைகள்:**

## நிலாவிரைச் சூரணம்

மெலிந்த தேகமுடையவர்கள் முதிர்ந்தபெரியவர்கள் சிறு குழந்தை கள், பெண்கள் ஆகிய அனைவர்க்கும், மலக்குடலைச் சுத்தி செய்ய 'நிலாவிரைச் சூரணம்' மிகச் சிறந்த மருந்தாகும்.

## செய்முறை

| | | | |
|---|---|---|---|
| சுத்திசெய்த நிலாவிரை | — | 10 | கிராம் |
| தோல் சீவிய சுக்கு | — | 10 | ,, |
| மிளகு | — | 10 | ,, |
| ஓமம் | — | 10 | ,, |
| வாய்விடங்கம் | — | 10 | ,, |
| சர்க்கரை | — | 50 | ,, |

இவைகளை அளவுப்படி எடுத்து தூய்மை செய்து இடித்துப் பொடி செய்து சலித்து ஒரு கண்ணாடிப் புட்டியில் பத்திரப்படுத்தவும்.

மலக்குடலைச் சுத்தம் செய்யவும், வாய்வு, விக்கல், மலச் சிக்கல், பித்தம் ஆகியன வந்துற்றபோது. கால் டீஸ்பூன் அளவு எடுத்து வாயி லிட்டு வெந்நீர் குடித்துவர, மேற்குறித்த தொல்லைகள் நீங்கவும், மலச் சிக்கல் உள்ளவர்கள், தினம் இரவில் படுப்பதற்குமுன் கால் டீஸ்பூன் வாயிலிட்டு வெந்நீர் குடித்துவர, காலையில் மலம் சரிவர போகும். தொடர்ந்து செய்துவர வேண்டும்.

## நிலாவிரைக் குடிநீர்

| | | |
|---|---|---|
| நிலாவிரை | — | 35 கிராம் |
| சுக்கு | — | 10 கிராம் |

இரண்டையும் இடித்து, அரை லிட்டர் நீர் விட்டுக் காய்ச்சி கால் லிட்டராகச் சுருக்க—1 மணி நேரம் காய்ச்சவும்.

பிறகு வடிகட்டிக் கொள்ளவும் இக்குடிநீரில் சிறிது இந்துப்பு கலந்து கொள்ளவும் வயிற்றுக் கடுப்பு இருப்பவர்கள், இந்தக் குடிநீரில் 2 அவுன்ஸ் தினமும் காலையில் குடித்துவர, அது நீங்கும்.

வயிற்றைச் சுத்தம் செய்ய இந்துப்பு சேர்க்காமல் அப்படியே குடிக்க பேதியாகும். மூன்று அல்லது நான்கு முறை பேதி ஆன பிறகு பிறகு, மோர் குடிக்க பேதி நிற்கும்.

## கை கால் பிடிப்பு நீங்க

மேற்படி தயாரித்த குடிநீரில் தேன் 1 டீஸ்பூன் கலந்து, அரை குவளை வீதம் தினம் காலையில் குடித்து வரவும். வாய்வுப் பொருள்களை நீக்கவும். 1 வாரம் இவ்விதம் சாப்பிட்டு வர, கை, கால் பிடிப்பு, இவை நீங்கும்.

மூலவாயு, குன்மம் நாட்பட்ட மலச்சிக்கல் ஆகியவற்றிற்கு நிலா விரைச் சூரணத்தை தினமும் இரவில் சாப்பிட்டு வரவும்.

"நிலாவாரை யின்குணந்தான் நீ கேள் மயிலே!
பலமூல வாயுவெப்ப பாவைச்—சிலகிரந்தி
பொல்லாத குன்மம் பொருமு மலக் கட்டுதல்
எல்லா மகற்றுமென எண்." (அ. கு)

எனவே, மலச்சிக்கல் உள்ளவர்கள், 'எனிமா'—மற்றும் 'டெல் கோலாக்ஸ் சப்போசிட்டர், போன்றவற்றைப் பயன்படுத்தி தொல்லை படுவதைவிட, நிலாவிரைச் சூரணத்தைத் தொடர்ந்து பயன்படுத்திவர எளிமையாக மலச்சிக்கலை ஒழிக்கலாம்!

## மூலிகைமணி வாசகர்கள் வீட்டில் இருக்க வேண்டியவை

(உடல் சக்திற்கும்—வளர்ச்சிக்கும் உகந்தது)

| | | | |
|---|---|---|---|
| 1. | அமிர்த சஞ்சீவி லேகியம் | ரூ. 10 | 00 |
| 2. | புழுவெட்டு தைலம்<br>பொடுகு, புழு அரிப்புக்கு | ரூ. 5 | 00 |
| 3. | குடும்ப மருந்து பெட்டி<br>(10 வித மருந்துகள் அடங்கியது) | ரூ. 20 | 00 |
| 4. | வாய்வுச் சூரணம்<br>(வயிற்றுக் கோளாறு—வாய்வுப் பிடிப்புகள்) | ரூ. 5 | 00 |
| 5. | நாக்குப்பூச்சி ஒழிய மாத்திரை | ரூ. 5 | 00 |
| 6. | முசுமுசுக்கைத் தைலம்<br>(ஆஸ்த்மா—பீனிச நோயாளிகட்கு) | ரூ. 5 | 00 |
| 7. | அவுரி—தலைமுடித் தைலம்<br>(தினசரி உபயோகத்திற்கு—முடி கொட்டுவது நிற்கவும்—வளரவும் | ரூ. 10 | 00 |
| 8. | மூலிகை ஸ்நானப் பொடி | ரூ. 2 | 00 |
| 9. | தூதுவளை சூரணம்<br>(சளி, நீங்கிட) | ரூ. 3 | 00 |
| 10. | கருவேலன்பட்டை பல்பொடி | ரூ. 1 | 00 |

தேவையான மருந்துடன் அஞ்சல் செலவு ரூ. 3-00 சேர்த்து.

**ஆ. இரா. கண்ணப்பர் R.M.P.**

7, அருளாம்பாள் தெரு, தி. நகர், சென்னை-17.

என்ற முகவரிக்கு M.O. அனுப்பி பெறலாம்.

# நோயும் மருந்தும்

**வினு: ஐயா, தற்போது சென்னை நகரில் பரவலாகக் காணப் படும் 'கண் நோய்' நீங்க என்ன செய்ய வேண்டும்?**

விடை: தற்போது சென்னை நகரில் காணப்படும் 'கண் நோய்' மூன்று நாட்களே உள்ளன. பலருக்கு மருந்தின்றியே குணமாகிவிடு கின்றது. என்ன காரணத்தால் இந்த நோய் வருகின்றது என்பது புலனாகாத நிலையில் எந்த மருந்தையும் போடாமல் இருப்பது நல்லது. மேலும் அந்த நோய் மூன்று நாட்களுக்குமேல் நீடிப்பதில்லை. தொற்று நோயாக இருப்பதால்' நுண் கிருமிகளின் தாக்கலாக இருக்கலாம். எனவே, இந்நோய்த் தடுப்பாக, குடிநீர்த் தூய்மை, உடல் தூய்மை ஆகியன இருப்பது நல்லது இறைச்சி சாப்பிடுபவர்களுக்கு இந்நோய் விரைவில் பீடிக்கிறது.

எனவே, அவற்றை நீக்கி, உணவில், வெங்காயம், பூண்டு, சீரகம் ஆகியவற்றை நிறைய சேர்க்கவும்.

நோய் வந்தபின், வேண்டுமானல் 'நந்தியாவட்டம் பூ' கொண்டு வந்து இரவில் கண்கள்மேல் வைத்து வெண்ணிற துணியால் கட்டிவிட வும். 1 மணி நேரம் கழித்து—அவிழ்த்துவிட்டு தூங்கி விடவும். நோய் வேகம் தணியலாம். அபாயமற்ற எளியமுறை!

**வினு: ஐயா, மூலிகை சிகிச்சையால் எல்லாவித நோய்களை யும் குணப்படுத்த இயலுமா? தங்களிடம் சிகிட்சைக்கு வருபவர் கள் அனைவரும் குணமடைகின்றார்களா?**

விடை: தங்கள் வினுவிற்குரிய விடை மிகப் பெரிய கட்டுரையாக எழுத வேண்டும். என்றாலும் சுருக்கமாகக் கூறுகிறேன்.

எவ்வளவு உயர்தரமான மருந்தானாலும், நோயாளியின் ஒத்துழைப்பு, நம்பிக்கை, ஆகியன இல்லாவிடில், குணமளிக்காது.

பூரண நம்பிக்கையுடன், மருத்துவர் கூறும் விதிப்படி, மருந்து சாப் பிடுபவர்கட்கு, நோய் எளிதில் தீரும்.

என்னிடம் வரும் பெரும்பான்மையான நோயாளிகள், நான் கொடுக்கும் மருந்துகளைப் பூரண நம்பிக்கையுடன் சாப்பிடுவதால், பலர் குணமடைகிறார்கள்.

சிலர் பூரண நம்பிக்கையுடன் வந்து, மருந்து வாங்கிச் சென்று, அரை குறையுடன் நிறுத்தி விடுவதால் குணம் பெருமல் இருப்பதும் உண்டு.

எனவே, பெரும்பான்மையான நோயாளிகளுக்கு குணம் கண்டுள்ள தால், மூலிகை சிகிட்சை, பெரும்பான்மைப் பலன் தருகிறது எனலாம்.

**வினு: 'நிலவேம்பு' மூலிகையைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தீர் கள் அது எங்குக் கிடைக்கும்? அதைப் பயன்படுத்தும்போது அனு சரிக்க வேண்டிய பத்திய முறைகள் என்ன?**

விடை: நாட்டு மருந்து கடைகளில் 'நிலவேம்பு' தாராளமாகக் கிடைக்கும். குளிர்காய்ச்சல், வயிற்றுக்கோளாறு ஆகியவற்றுக்கு இது பயன் படுவதால் நோய் தீரும்வரை, எளிய கஞ்சி ஆகாரங்களையே சாப் பிடவும், கடுகு, கடலை எண்ணெய், காபி, டீ, புகையிலை ஆகியன நீக்கவும்.

**வினு: சாதாரணமாக சலதோஷத்தை எப்படிப் போக்கலாம்? சளிக்கட்டை எப்படிக் குறைக்கலாம். சுலபமான மருத்துவம் கூறவும்!**

விடை: சலதோடம் என்பது மூன்று நாட்கள் இருந்தே தீரும். அடிக்கடி வராமல் தடுக்க, தக்காளி ஜுஸ், குளிர்ச்சி தரும் காய்கறிகள், புகைப் பழக்கம் ஆகியவற்றை நீக்கவும். சளிக்கட்டை நீக்க, 'தூதுவளை' என்ற மூலிகையை வாரம் மூன்று நாட்கள் நெய்யுடன் சேர்த்து துவையல் செய்து சாப்பிடவும்.

**வினு: தங்களின் 'நம் நாட்டு மூலிகைகள்' முதல் பாகத்தில் 'வெள்ளெருக்கன்' செடி பற்றிய மூலிகையைப்பற்றி எழுதியுள்ளீர் கள். மந்திர சக்தி, வசியம் ஆகியன செய்யலாம் என்று எழுதி யிருந்தீர்கள். அதற்குரிய பூசை விதிகள், மந்திரங்கள் பற்றி எனக்குத் தெரிவிக்கவும்.**

விடை: ஐயா, வெள்ளெருக்கன் செடி ஒரு மாந்திரிக மூலிகை என்று பழைய நூல்கள் குறிப்பிட்டுள்ளவற்றையே குறிப்பிட்டேன். தற்கால வாழ்வில், மந்திர சக்தி, வசியம் ஆகியன எடுபடாது. மேலும் அவற்றை நாம் கடைப்பிடிக்கவும் இயலாது. எனவே, மூலிகைகளின் மருத்துவப் பயனை மட்டும் பெற முயற்சியுங்கள். பண்டைக்காலத்தில்

மூலிகைகளைக்கொண்டு மந்திர வேலைகள் செய்தார்கள் என்பதை மட்டுமே குறிப்பிட்டேனே தவிர, எப்படிச் செய்தார்கள் என்பதைக் குறிப்பிட விரும்பவில்லை—(அது தேவையற்ற காரணத்தால்)

வினா: ஐயா! எனக்கு 25 வயது T. B. நோய் இருப்பதாகக் கண்டுபிடித்து இரண்டு மாத காலமாக ஆங்கில மருந்து சாப்பிட்டு வருகிறேன். தங்கள் மருந்துகள் சாப்பிட அவா. தெரிவித்தால் வாங்கி சாப்பிடுவேன்.

விடை: டி. பி. நோய்க்கு தமிழ் மருத்துவத்தில் மருந்துகள் இருந்த போதிலும், ஆங்கில மருந்து சாப்பிட்டு வருவதால், தொடர்ந்து அதனையே சாப்பிட்டு வரவும். இடையில் தமிழ் மருந்து சாப்பிடக் கூடாது. வேண்டுமானல், சளி, இருமல் ஆகியவற்றைப் போக்க, உணவில் அடிக்கடி, முசுமுசுக்கை, தூதுவளை, ஆகியன சாப்பிட்டு வரவும். குணம் காணுவிடில், பிறகு எம்மிடம் வரவும்.

வினா: ஐயா, சுமார் இரண்டரை ஆண்டுகாலமாக என் மூக்கின் வழியாகத் துர்நாற்றம் வருகிறது. அடிக்கடி சளியும் பசுமை கலந்த நிறத்தில் கொழுப்பு வருகிறது. உண்ட உணவு சீரணமாவதில்லை. குமட்டல் உள்ளது. எடை குறைகிறது. எந்த வேலையும் செய்ய இயலவில்லை சிறிது தூரம் ஓடினுல்கூட களைப்பு ஏற்படுகிறது. இதற்கு காரணத்தையும் நீக்க வழியையும் கூறவும்?

விடை: தாங்கள் குறிப்பிட்ட குறி குணங்கள் மண்டைப் பீனிசம் முற்றிய நிலையைக் குறிக்கிறது. எடைக்குறைவு, இளைப்பு, ஆகியன நுரையீரல் பாதிப்பைக் குறிக்கிறது. ஆஸ்த்மா அல்லது டி. பி நோய்க்கான அறிகுறிகள் இவை. வசதி இருப்பின் நேரில் வந்து ஆலோசனையும் மருந்தும் பெறலாம். அல்லது மருத்துவமனை சென்று உரிய சிகிட்சை பெறவும்

வினா: என் பற்களில் பாசி ஏறி, மஞ்சள் கட்டியாக மாறியுள்ளதால், துர்நாற்ற மேற்படுகிறது இதைத் தவிர்க்க என்ன செய்ய வேண்டும்?

விடை: கரிசலாங்கண்ணி இலை எடுத்து கறையுள்ள இடங்களில் தேய்க்கவும். பிறகு ஆலம் விழுது குச்சியால் பல் துலக்க, குறை நீங்கும்.

**வினா: முகப்பருக்கள் ஏற்பட்டு முகத்தை விகாரப்படுத்தி யுள்ளது. இதை மாற்ற என்ன வழி?**

விடை: எலுமிச்சம் பழத்தை முகத்தில் தேய்த்து 10 நிமிடம் கழித்து பச்சைத் தண்ணீரில் கழுவி வர, அவை ஓரளவு மாறும்.

**வினா: என் வீட்டின் அருகே கீழாநெல்லி, கரிசலாங்கண்ணி ஆகியன நிறைய கிடைக்கின்றது. இவற்றை நல்ல முறையில் எவ்விதம்—எதற்குப் பயன்படுத்தலாம்?**

விடை: கீழாநெல்லியும்—கரிசலாங்கண்ணியும், இணை பிரியா நண்பர்கள். இருவரும் சேர்ந்தால், தலைக்கு வரும் நோய்கள், தலை தெறிக்க ஓடிவிடும் எளிய ஒரு தைலம் செய்யும் முறையைக் கீழே தருகிறேன். செய்து பலன் பெறுங்கள்.

| | |
|---|---|
| கீழாநெல்லிச்சாறு | கால் லிட்டர் |
| கரிசலாங்கண்ணிச் சாறு | கால் லிட்டர் |
| பசும் பால் | கால் லிட்டர் |
| நல்லெண்ணெய் | அரை லிட்டர் |

இவைகளை ஒன்றாகக் கலக்கவும்.

அடுத்து,

அதிமதுரம், கஸ்தூரி மஞ்சள், கடுக்காய், கிச்சிலிக் கிழங்கு, ஏல அரிசி, மிளகு, ஆகியவற்றை சம அளவு அதாவது, 20 கிராம் எடுத்து, இடித்து சிறிது பால் விட்டு அரைத்து, மேற்கண்ட கலவையில் கலந்து, அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். முருகு பதத்தில் இறக்கி வடிகட்டிக்கொள்ளவும்.

வாரம் இருமுறை தலையில் தேய்த்து குளித்து வர,

கண் எரிச்சல், மூளைக்கொதிப்பு, மண்டை வறட்சி, மயக்கம் ஆகியன நீங்கும்.

**வினா: பொதுவாக உடல் வளர்ச்சி எந்த வயதுவரை இருக்கும்?**

விடை: ஆண்களுக்கு உடல் வளர்ச்சி 18 முதல் 25 வரை நன்கு இருக்கும்.

பெண்களுக்கு, 11 முதல் 16 வரை வளர்ச்சி நன்கு இருக்கும். இந்த வயதில் வளரும் வளர்ச்சியே உறுதியானது. சீரானது.

**வினு: எண்ணெ தேய்த்து குளிக்கும் நாளன்று எந்தெந்த உணவுப் பொருள்களை (குறிப்பாக கீரை வகைகள்) விலக்குவது? எவைகளை சேர்த்துக்கொள்வது நல்லது?**

விடை: விலக்க வேண்டிய பொருள்கள்: முளை கீரை, தக்காளி, முள்ளங்கி, சுரைக்காய், பூசணிக்காய், பீர்க்கங்காய், அகத்தி, சிறுகீரை, பருப்பு கீரை, மணத்தக்காளி, பொன்னுங்கண்ணி, புளியாரை, வெண்டைக்காய், முட்டைகோஸ் ஆகியவைகளும், முக க்ஷவரமும், பெண் சேர்க்கையும் வெய்யில் அலைச்சலும் கூடாது.

சேர்க்க வேண்டியன. அரைக்கீரை, சர்க்கரைவத்திகீரை, இஞ்சி, புதினு, கருவேப்பலை, மிளகு ரசம், அவரைப் பிஞ்சு, பசு மோர், நெய், பால், முருங்கைப்பிஞ்சு, கிழங்கு வகைகள், தூதுவளை, சுண்டை வத்தல் ஆகியன சேர்க்க.

**வினு: ஐயா தாங்கள் ''வைத்திய சித்தன்'' என்றும், மூலிகைச் சக்கரவர்த்தி என்ற பல பட்டப் பெயர்களை திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் போன்றவர்கள் சூட்டியதை பல பத்திரிகை வாயிலாக அறிந்து பெரு மகிழ்வு எய்தினேம். அடியேனுக்கு ஒரு சிறு விளக்கம் தாருங்கள்? அதாவது ''ஈ எச்சக் கீரை'' என்பதாக கூறும் பெயர் வழக்குச் சொல்லாக எந்தவித மான கீரையினத்தைச் சேர்ந்தது? நமது நாட்டில் கிடைக்குமா?**

விடை: ஈ எச்சக் கீரை தாராளமாகக் கிடைக்குமே! உமக்கு தெரிந்த ஒன்றுதான் இது. நல்ல தமிழ் வார்த்தையின் வழக்கு பெயர் தான் ஈ எச்சக்கீரை என்பது நாளடைவில் மாறி விட்டது. தற்போது இதற்கு புதினு கீரை, பொதினு கீரை என்றும் சொல்லுகிறேம். மார்கட்டுகளில் இஞ்சி, கொத்தமல்லியுடன், விற்கும் புதினு கீரைதான் ஈ எச்சக்கீரை! புதினு என்பது இந்துஸ்தானி பெயர் விளங்குகிறதா!



## வாழ்க மணமக்கள் !

மதுரை குப்புசாமி செட்டியார் அவர்களின் குமாரத்தி ஆவடைத் தங்கம்மாளுக்கும் வத்னுயிருப்பு ஆவடையப்பன் செட்டியார் அவர்களின் குமாரர் ராமச்சந்திரனுக்கும் திருப்பரங்குன்றம் சன்னிதானத்தில் 11—9—75ம் தேதி சிறப்பான முறையில் திருமணம் நடந்தது. அவ்வமயம் உறவினர்களும், நண்பர்களும் மற்றும் பல பிரமுகர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினார்கள்.

வாழ்க மணமக்கள் !

# மீன்களில் பாதரசச் சேர்க்கை

வலிப்பு வருவதால் இறப்பதை பார்த்திருக்கிறோம். பேய் பிசாசு களின் சேட்டையால்தான் வலிப்பு வருவதாகத் தற்கால அறிவியல் முன்னேற்றங்கள் அறியாத மக்கள் நம்புகிறார்கள். அதுவும் ஒரு கிராமம் முழுவதுமே இந்த வலிப்பு நோய் வந்து மக்கள் துன்பம் அடைவார்களா யின், பேயின் சேட்டை அந்தக் கிராமம் முழுவதுமே பரவி விட்டதாக அவர்கள் கருதுகிறார்கள்.

வலிப்பு மட்டுமல்ல; கண்ணிழந்த குருடராய் காதடைத்துச் செவிட ராய் இழுப்பு வந்ததால் முடவராய் மக்கள் பலர் தொல்லைக்குள்ளான நிகழ்ச்சி ஒரு முறை ஜப்பானில் நிகழ்ந்தது. 1953-ஆம் ஆண்டில் நிகழ்ந்த இத்துன்ப நிகழ்ச்சிகள், ஜப்பானிலுள்ள சிறிய ஊர் ஒன்றின் மக்கள் அனைவரையும் பாதித்தது. மினமத்தா கடற்கரையிலமைந்த அந்த ஊர் மக்கள், பெருந் தொகையாக இறந்ததற்குரிய காரணத்தை மருத்துவர்கள் உடனே அறிந்துகொள்ள முடியவில்லை.

மினமத்தா மக்களின் உணவில் நச்சுப் பொருள் கலந்திருந்தமை தான் இதற்குக் காரணம் எனப் பின்னர் அறிவியலாளர்களால்ஒருவாறு ஊகிக்க முடிந்தது. மினமத்தாக் கடலிலிருந்து கிடைத்த மீன்களை ஆராய்ந்தபோது அவற்றில் அளவுக்கதிகமாகப் பாதரசம் கலந்திருப் பதை அவர்கள் அறிந்தனர்.

பாதரசம் என்பது உலோகங்களுள் ஒன்று. திரவ நிலையிலுள்ள இந்த உலோகப் பொருள் சாதாரணமாக வெப்பமானிகளிலும் அமுக்க மானிகளிலும் பயன்படுத்தப் படுகிறது. பாதரசம் இயற்கையில் ஏராள மாகக் கிடைக்கின்றதெனினும் மனிதனைப் பாதிக்கக்கூடிய முறையில் அது இல்லை.

ஜப்பானிலுள்ள மினமத்தாக் கடற்கரையில் உள்ளவர்கள் உட் கொண்ட மீனில் பாதரசத்தின் அளவு அதிகமாக இருந்ததால், நோய்க் குள்ளானார்கள், இறந்தார்கள் என்ற செய்தி ஜப்பான் முழுவதிலும் பரபரப்பை ஏற்படுத்தியது. ஏனெனில், ஜப்பான் மக்கள் பச்சையாக வும் சமைத்தும் மீனைப் பெருமளவு உட்கொள்பவர்கள். தாம் உண் கின்ற மீனிலும் பாதரச அளவு அதிகமாக இருக்குமோ என அஞ்சி னார்கள்.

ஜப்பானிய அரசும் இந்தச் சிக்கலில் அக்கறை காட்டியது. ஜப்பானியச் சந்தைகளில் விற்கப்பட்ட மீன்களின் பாதரச அளவை அறியுமாறு உத்தரவிட்டது. மினமத்தாக் கடலில் பிடிக்கப்பட்ட மீன்கள் தவிர ஏனைய மீன்களில் பாதரச அளவு மிகக் குறைவாக இருந்ததை அறிவியலாளர்கள் கண்டறிந்தனர்.

மினமத்தாக் கடலில் பிடிக்கப்பட்ட மீன்களில் மட்டும் பாதரசக் கலவை அதிகமாக இருந்தது ஏன்? மினமத்தாக் கடற்கரையில் பல தொழிற்சாலைகள் அமைந்திருந்தன. இத் தொழிற்சாலைகள் தம் கழிவுப் பொருட்களை கடலுக்குள் செல்லவிட்டன. பாதரசத்தை பயன்படுத்திப் பொருட்களை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்றிலிருந்து வந்த கழிவு நீர் பாதரசத்தை கொண்டிருந்தது. இதனால் மினமத்தாக் கடல்நீரில் பாதரசம் அளவுக்கதிகமாக கலந்திருந்தது.

கடல் நீரில் கலந்திருக்கும் கனிப்பொருள்களை உறிஞ்சி உட்கொண்டு தான் நுண்ணுயிரனங்கள் தம் வாழ்வை மேற்கொள்கின்றன. மேலும் புரதங்கள் பாதரசத்தை கவரும் இயல்புடையன. இதனால் கடலில் கலந்திருந்த மேலதிக பாதரசம் உயிரனங்களிலும் கலந்தது. நுண்ணுயிரினங்களில் கலந்த இந்த மேலதிகப் பாதரசம், நுண்ணுயிரினங்களை உணவாகக்கொள்ளும் மீன்களுடன் கலந்தது. இதனால் மீன்களிலும் பிற உயிரினங்களிலும் அளவுக்கதிகமாக பாதரசம் கலந்திருந்தது மீன்களை உணவாகக்கொண்ட மக்கள் இப்பாதரசத்தையும் உட்கொண்டனர்.

பாதரசம் மக்களின் ரத்தத்துடன் கலந்தது. பாதரசம் ரத்தத்துடன் மூளை நரம்புகளை அடைந்தது மூளை நரம்புகளுட் சென்ற பாதரசம் வலிப்பை ஏற்படுத்தியது; கண்களை குருடாக்கியது; காதை செவிடாக்கியது; காலை முடமாக்கியது; உயிரையே பறித்துக்கொண்டது.

பாதரசம் அளவுக்கதிகமாக உட்கொள்ளப்பட்டதால் ஏற்படும் நோய்களை மாற்றுவது எளிதல்ல. மீளப்பெற முடியாத மாற்றங்கள் ஏற்படுத்தும் இயல்பை உடைய பாதரச நச்சு சேர்க்கையை தவிர்ப்பதற்கு உலக நாடுகள் கூட்டாக நடவடிக்கை எடுத்து வருகின்றன. ஜப்பானில் நடந்த நிகழ்ச்சியும் விளைவுகளும் உலகெங்கும் பரபரப்பை ஏற்படுத்தின. இதனால் மீனை பெருமளவு உணவாகக் கொள்ளும் நாடுகளில் பாதரசக் கலவை பற்றிய ஆராய்ச்சிகள் நடைபெற்றன.

ஸ்வீடன் நாட்டில் உள்ளவர்கள் மீனை பெருமளவு உட்கொள்கின்றனர்கள். ஸ்வீடனில் உள்ள ஏரிகள் பலவற்றில் பாதரசம் அளவுக்கு அதிகமாக இருப்பது காணப்பட்டது. இதையொட்டி நாற்பதுக்கும் அதிகமான ஏரிகளில் மீன் பிடிப்பது தடை செய்யப்பட்டது. இந்த ஏரிகளிலுள்ள மீன்களைப் பறவைகள் பல உணவாகக்கொண்டன. இப்பறவைகளில் பாதரச அளவு அதிகரித்தது. பறவைகளை வேட்டையாடி உணவாகக்கொண்ட மக்களும் பாதிக்கப்பட்டனர்.

பாதரசம் பரவலாகக் கடலுள் கரைவதால் மீன்களுடலில் எளிதில் சேர்ந்து விடுகிறது. அதுவும் தொழிற்சாலைகள் பெருகிக்கொண்டு போகும், இந்நாட்களில் பாதரசம் கடல் நீரில் கலப்பதைத் தடுப்பது எளிதல்ல. குளோரின், உப்புக்கள் முதலியவற்றை தயாரிக்கும் தொழிற் சாலைகளின் கழிவுப் பொருட்கள் பாதரசத்தை மேலதிகமாகக் கொண் டிருக்கின்றன.

மோட்டார்கார்கள், சாதாரணமாகப் பயன்படுத்தும் எரிபொருளான பெட்ரோலில் பாதரசம் உண்டு மோட்டார்கள் வெளித்தள்ளும் புகை மண்டலத்தில் பாத ரசக் கலவைகள் உண்டு. காற்றுடன் கலக்கும் இக் கலவைகள் மழை நீருடன் பூமிக்கு வருகின்றன. ஆற்றிலும், குளங் களிலும் ஏரிகளிலும் சென்றடையும் இவை கடலுக்குச் செல்கின்றன. பாதரசம் காற்றுச் சுழலில் அளவுக்கதிகமாகப் பெருகுவதற்கு மோட்டார் கார்களும் காரணமாக உள்ளன.

வர்ணப் பூச்சுகளுக்கு பயன்படுத்தப்படும் வர்ணம் செய்யும் முறை யிலும் பாதரசம் பயன்படுத்தப்படுகிறது. வர்ணம் உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள்கூடப் பாதரசத்தைக்கொண்ட கழிவு நீரை வெளி யேற்றலாம்.

மீன்களில் உள்ள பாதரசம் மீதைல்—பாதரசமாக (Methyl Mercury) இருக்கின்றது. இந்த மீதைல் பாதரசத்தின் அளவை நாம் அளவிடலாம். உலகில் உள்ள நாடுகள் பல மீனில் உள்ள பாதரச அளவிற்கு உச்ச வரம்பு விதித்துள்ளன. எடை அளவீட்டில் இலட்சத் துக்குப் பத்து என்ற வீதத்தில் உச்ச வரம்பு விதிக்கப்பட்டுள்ளது. சில நாடுகளில் இலட்சத்திற்கு ஐந்து என்ற விகிதம் உச்சவரம்பாக உள்ளது. அதாவது, மீன்களில் மிகச் சிறிய அளவிலான பாதரசம் இருந்தால் மட்டுமே பாதுகாப்பானது எனக் கூறுகின்றார்கள். அளவுக்கு அதிக மாகப் பாதரசம் கொண்டுள்ள மீன்களை உட்கொண்டால் உடல் நலம் பெரிதும் பாதிக்கப்படும்.

பாதரசச் சேர்க்கையால் உடல்நலம் கெட்டுவிடக் கூடாது. வலிப்பும் குருட்டுத் தன்மையும், மலட்டுத் தன்மையும், செவிட்டுத் தன்மையும உயிரிழப்பும் பாதரசச் சேர்க்கையால் ஏற்படுவது தவிர்க்கப்படல் வேண்டும்.

நமது சுற்றுச் சூழல் தூய்மையாக இருந்தால்தான் பாதரசம் உண வுடன் உட்செல்லுவது தவிர்க்கப்படும். தொழிற்சாலைகள், தம் கழிவுப் பொருட்களை உரிய முறையில் பண்படுத்தியே வெளியேற்ற வேண்டும். இல்லையெனில், இவற்றிலிருந்து எழும் நச்சுப் பொருட்கள் மனித இனத் திற்கு மீளாத் துயரைத் தரும்.

—நன்றி. கலைக்கதிர் செப்டம்பர் 75

---

இக் கட்டுரையைப் படிக்கும் வாசகர்கட்கு இரண்டு கருத்துக்கள் தெளிவாக்கப்படுகின்றது.

மீன், போன்ற அசைவ உணவில், நம் உடலுக்குத் தேவையான சத்துக்களைவிட, உடலுக்கு ஊறு விளைவிக்கும் நச்சுப் பொருட்களே அதிகம், என்பதை இக் கட்டுரை நன்கு தெரிவிக்கிறது.

உணவுப் பொருட்களில் பாதரசம்போன்ற நஞ்சுகளை முறிக்க கீழ்க் கண்ட மூலிகைகளை முறைப்படி பயன்படுத்தலாம். அதனால் பாதரசத் தின் தாக்குதல்கள் குறையலாம், நீங்கலாம்.

| | | |
|---|---|---|
| மாதளம் பூ | — | ½ கைப்பிடி |
| அருகம்புல் | — | 1 ,, |
| அதிமதுரம் | — | 5 கிராம் |
| மிளகு | — | 6 |
| சீரகம் | — | 2 சிட்டிகை |
| பனங்கற்கண்டு | — | சிறிது |

இவற்றை குடிநீராக்கி, காலை, மாலை, இருவேளை அருந்தி வர, நஞ்சு முறியும்.

பாதரசத்தின் வேகம் அதிகமாகி அதனால், கைகால் முடக்கி நோய் வயப்பட்டிருப்பின், அந்த நஞ்சு வேகம் தணிய,

புங்கம் வேர், தென்னைக் குரும்பை, தென்னைப் பூ, மிளகு, ஆகியன வகைக்கு 10 கிராம் போட்டு 1 லிட்டர் நீர்விட்டுக் காய்ச்சி, 200 மில்லி அளவு சுருக்கி, காலை, மாலை இருவேளை 3 நாட்கள் சாப்பிட்டு வரவும்.

—க. வேங்கடேசன்.

சைவ உணவே சிறந்த உணவு

# மூலிகை ஆய்வு

சித்த மருத்துவ பேராசிரியர்,
டாக்டர் மு. வே. ரமணன், L.I.M.,
மேற்பட்டப் படிப்பு கலையகம்
தமிழக இந்திய மருத்துவக் கல்லூரி
பாளையங்கோட்டை

**மூலிகை:**

மண் தோன்றிய கால முதல் மூலிகைகள் பிறந்தன. இவை, மரம், செடி, கொடி, புல், பூண்டு எனும் பெரும் பகுப்புகளுடன் கூடிய பஞ்சாங்கங்கள் கொண்டுள. அதாவது வேர், தண்டு, இலை, பூ, பழமும் வித்து மெனக் கொள்ளலாம்.

**குடும்பம் :**

இதனை 174 பகுப்பிலடக்கியுள்ளனர். 2214 மூலிகைகள் ஷெ பகுப்பிலடங்கும். சுமார் 1008 மூலிகைகளுள் சத்தெடுத்துள்ளனர். இடைக்காடரும் சட்டைமுனி நிகண்டிலும் காணலாம்.

இனங்கள் குணத்தினின்றுதான் கொடுக்கப்பட்டுள்ளது. சீந்திற் குடும்பம், வேப்பங் குடும்பம், அத்திக் குடும்பம், புல்லினம், மர இனம், கீரை இனம், நெல்லி இனம், நெல் இனம், வாழை இனம், தென்னை இனம், கடுக்காய் இனம் என எல்லா இனங்களும் அதன் பிரிவினையும் 174 குடும்ப வாயிலாக வகுத்துள்ளனர்.

**ஆக்கியோர்:**

மனிதனினம் நம் முன்னோரினின்று நாம் வாழ்வதை ஒக்க, நம்மைச் சுற்றிலும் மூலிகைகளும் தோன்றி, மாறி வந்துள்ளது. இவற்றை சிவனும், உமையும், நந்தியும், மூர்த்திகளும் மருத்துவனுகிய இந்திர னும், தேவர்களும், இருடிகள், முனிகள், நவ நாதர்கள், மூலன் ஆதி யாக வந்த சர்வ சித்தர்களுமாவர்.

கவனிக்க வேண்டுவன. மூலிகைகள் உயிருள்ளவை. அவற்றை திடீரென பிடுங்குகின்றபோது அதன் உயிர்சக்தி பிரிந்து விடுவதாகவும் அதற்கென, சில அட்சரங்களை பிரயோகித்துச் சீவனைக்கட்ட வேண்டும். இன்றேல் அதனை ஆக்கியோரின் நிர்ணயப்பாட்டிற்கிணங்க ஒடிவிடு

மெனக்கூறுவதால் நல் வினைபுரிய சித்தர்கள் மேற்கோள்களுக்கிணங் கவே பறித்தல் வேண்டும்.

## மூலிகைகளின் குணங்கள்:

மூலிகைகளின் குணங்கள் அதனதன் சுவையையே ஆதாரமாகக் கொண்டுள்ளது. (1) கசப்பு (Base) (2) இனிப்பு (Carbodhydrates) (3) கார்ப்பு (Calcium vit. c ) (4) துவர்ப்பு (Metals & Elements) (5) புளிச்சுவை:—(காரத்தை Acids) புளியம்பழம் – எட்டி பழம் (6) உப்பு (Fats) யை ஆதாரமாகக் கொண்டுள்ளவை. கார்ப்புச்சுவை (Proteinsgrowth promoting vit. c.) & Calcium ஆதாரமாகக் கொண் டுள்ளவை.

துவர்ப்புச் சுவை (Elements) கனிப்பொருளின் ஆதாரங்கொண் டவை.

உப்புச்சுவை (Fats) கொழுப்புப் பொருள்களின் ஆதாரவாக உள:

| | | | |
|---|---|---|---|
| (உ-ம்) | (1) | புளி | (Tartaric acid) |
| | | பழம் | (Citric acid) |
| | (2) | வேப்பு | (Base alkali) |
| | | எட்டி | ( ,, ,, ) |
| | (3) | கரும்பு | (Sacrose) |
| | | அரிசி | (Carbohydrate) |
| | | கிழங்குமா | (Starch) |
| | (4) | மிளகு | (Proteins) |
| | | மிளகாய் | (Vit. c.) |
| | | அக்ராகாரம் | (Vitamins) |
| | | இஞ்சி | (Calcium) |
| | (5) | ஆவாரை | (Iron) முள்ளங்கி (Silver) |
| | | பூலா | (Iron) பொ. கானி. ஊ. தும்பை(Gold) |
| | | அத்தி | (Lead) சி. கரந்தை. சி. மூலம் (செம்பு) |
| | (6) | வா. தண்டு | (Fat splitting Enzymes) |
| | | கீ. தண்டு | (Fat ,, ) |
| | | பிரம்மதண்டு | (Drug of Psychonentotic) |
| | | பிரண்டை | (Mollecular Splitting drug) |

**Diff. School Thought:**—சுவை Taste:—மேநாட்டோர் சுவை நாவிலெழும் எழுச்சியென கொண்டுள்ளனர். அதுவே சரி என்றால்

வேம்பும், எட்டியும் கசக்க வேண்டியதில்லை! கரும்பு இனிக்க வேண்டிய அவசியமிராது! "இதுவுந் தவறு?"

ஆகவே, சுவை, பொருள்களின் குணம் (Characters) என முன்னரே பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்குமுன் எழுதப்பட்ட விஞ்ஞான ரீதியாய் பகுக்கப்பட்டுள்ளதோர் பெருமுண்மையாகும்.

### தேர்வு முறை (Identification)

சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் என்ற ஐ வகையால்தான் மூலிகைகளை தேர் வேண்டும்—சுவையை சொல்லியமையின்.

ஒளி:—தோற்றத்தையே குறிக்கும் சாதாரண தாவர இயலெனக்கொள்க (Botanical Identity) appcan.

ஊறு:—செந்தொட்டி, (பாடாண மூலி) (Plant with arsenical property)ல் காஞ்சொரி பட்டவுடன் தடிப்பும் தினவுமளிக்குமல்லவா அதனை ஊறின் வாயிலாக அறிய வேண்டும். தொட்டாச்சினிங்கி, அழுகண்ணி, தொழுகண்ணி.

ஓசை:—கன எருமை என்றோர் மரமுண்டு அது எருமை கனைப்பது போன்று நடுநிசியில் கனைக்கும்-பொதுவாக ஒவ்வொரு மூலிகைக்குள்ளும் ஓர் ஓசையுண்டு. அதுவே அதன் உயிர்ப் பொருள்.

நாற்றம்:—பீ நாறிச்சங்கன்—பேய்த் தும்பை — புஷ்பங்களில் (பன்னீர் பூ, மல்லிகை முல்லை, தாழம்பூ, மகிழம்பூ, அனிச்சம், பச்சை, திருநீற்றுப் பச்சை (உத்திராக்கம்) வெட்டிவேர், சந்தனம், நன்னாரி போன்றவற்றினின்று தேறலாம்.

யாவற்றிலும் உயர்வு 84 வகை சீவன்களை சமண முனிவர்கள் மிகத் தெளிவுபட எடுத்துரைத்துளர். பஞ்சபூதங்களில் 21 லட்ச ஜீவராசிகளும் ' தேயுவில் ஜீவனில்லை என கொள்ளக்கிடப்பினும் அதுவே சீவ ஆதாரமாகும்.

ஓர் உயர்வு:—ஒவ்வொரு பூதமும் ஐம்பூதக் கூட்டுறவாலேயே பரிமளிக்கின்றது. தனித்து இயலமுடியாதவொன்று மூத்தோடங்களிலடங்கியுள. ஆக்வே பூதத்துவம் அவ்வவற்றின் உடற்தத்துவமே! திரிதோடங்களாகும்.

இதனை ஆதரவாகக் கொண்டுதான் மருத்துவ இயல் வகுக்கப்பட்டுள்ளதென்பது மறுக்க முடியாததொன்ருகும். மேதைகட்கு உள்ளம் வேணும் பெரும் நூல் நுண்ணறிவு தேவை. அகந்தை அழியின், அறிவுணர்வேற்படும். எல்லாமறிந்தால் உலகே தன்னுள்ளாகும்.

குற்றவாயலில்:—

உடலின் தத்துவங்களின் வாத பித்த ஐயம் முக்கியமானவை. வாதம் தோற்றப் பொருளாகவும், பித்தம் திதிப் பொருளாகவும், கபம் ஒடுக்கப் பொருளாகவும் இயல் உடலில் (Physiological body)ல் இயக்குகின்றது. அதனை நிலை பிறழுகின்ற காலை ஷெ மூன்றுப் பொருள்களும் தோஷமாகின்றன

மூலிகை பகுப்பில்:—

தோஷத்தை உண்டு பண்ணும் மூலிகைகளெனவும் முத்தோடங்களை குறைக்கும் பொருள்களாகவும் இரு பிரிவுகளாக முத்தோடத்தின் அடிப்படையில் மூலிகைகளை சித்தர் கணங்கள் வகுத்துள்ளனர். ஆகவே தோடங்களையும் பூ மண்டலத்தின் கண் மக்கள் நல் வாழ்வு பெறவும் எளிதில் தீர்க்கும் மருந்துகளென மூலிகைகளை மண்ணுணுர் சிகிச்சையாக வகுத்தமைக்கு உலகு நன்றி செலுத்தான்றென்றும் கடமைபட்டதென்பது அவசியமாகும்.

நச்சு மூலிகைகள்:—

மனிதன் நஞ்சின்பால் வயப்பட்டக்கால் ஒர் நஞ்சை மற்றொரு நஞ்சால் முறிக்கவேண்டியிருப்பதால் நஞ்சு மூலிகைகளையும் தோற்றுவித்தனர்போலும் ஆறு அறிவும் கூடிய சீவப்பொருள் மனிதனினும் ஓரறிவு ஈரறிவு கொண்ட பொருள்களும் நிலையாமையை நிலைக்க செய்ய வேண்டியுள—மலை, மண், மண், படுபொருள்கள் ஓரறிவின்பால் பகுத்திருப்பினும் வளர்ச்சியுடைய தாவரங்கள் ஈரறிவின் பயன் படுகின்றன ஊர்வன மூன்றறிவாளுலும் நான்கறிவியலில் மிதப்பனவும் ஐந்தறிவில் நடப்பனவாகிய மிருகங்களும் —

ஆறறிவியலில் மக்கள் தேவர் நரர்களும் பயன்படலே பிற்றைய ஐந்தாக்கொள்ள வேண்டி உள.

மனிதன் நிலையாமையை காலவரையறைக்குள் நிலைப்படுத்தீ மண்மூலிகை மிக முக்கியமென தோற்றுவிக்கப்பட்டுள்ளது யாரும் அறியற்பால.

# மூலிகை அகராதி

## கோவை

வேறு பெயர்கள்: ஆங்கிலம்—(Coccinia Indica)
தெலுங்கு—பிம்பீகா. மலையாளம் - கோவ
கன்னடம்—தொன்டிபல்லி,

விபரம்: இந்தியாவெங்கும் விளையும் கொடியினம். இனிப்பு, கைப்பு என இரு பிரிவுண்டு. உருவத்தையும், நிறத்தையும் வைத்து, மூவிரல் கோவை ஐவிரல் கோவை,நாமக் கோவை, என மூன்றுவகையாகப் பகுப்பர்.

குணாதிசயம்—இனிப்புக் கோவை; குளிர்ச்சியைத் தரும். கைப்புக் கோவை, வெப்பம் தரக்கூடியது. கோவை இலை, கண் குளிர்ச்சிக்கும், சொறி சிரங்கு, தேகச் சூடு ஆகியவற்றிற்குதவும். கிழங்கு, கோழை, பித்த கோபம், இரைப்பு ஆகியவற்றைப் போக்கும்,

## கௌரிவாற்புல்

வேறு பெயர் தெரிந்தில. தோட்டத்தில் விளையக்கூடிய ஒரு வகைப் புல். சுணைகள் கூடியது. கதிர் நீண்டு இருக்கும். சிறு பிள்ளைகள் விளையாட்டுக்காக இதன் கதிர்களைப் பயன்படுதுவார்.

குணாதிசயம்: இதனை மருத்துவத்திற்குப் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை ஆனால் பாதரசம் கட்ட இதனைப் பெரிதும் பயன் படுத்தியதாகத் தெரிகிறது.

## சங்கன்

வேறு பெயர்கள்: சங்கஞ்செடி, நற்சங்கன், முட்சங்கன்.
ஆங்கிலம்: Azima Tetracantha.
தெலுங்கு: தெல்லா உபி.
மலையாளம்: சங்கன்

விபரம்: தென்னிந்தியாவிலும், கீழ் கரையோரங்களிலும் பயிராகும் ஒரு வகை முட்செடி. இலை தடிப்பாகவும் முற்றும் இருக்கும்

குணாதிசயம்: இலைக்கும், வேருக்கும், கரப்பான், கிரந்தி, குன்மம் ஆகியன போக்கும். வெப்பம் தரும். கோழையை அகற்றும். சிறு நீரைப் பெருக்கும்.

## சடாமாஞ்சி

வேறு பெயர்கள்: சடாமாசி, ஜடமாஞ்சி, பைசாசி, சடிலே, மாமிசி, பூதகேசினி.

ஆங்கிலம்: Valerinae Rhiyoma.

தெலுங்கு: ஜடாமாசி, மலேயாளம்—மஞ்சி

விபரம்: இது சீமைச் சடாமாஞ்சி, நாட்டுச் சடாமாஞ்சி, என இரு பிரிவுண்டு. ஒருவகைப் பெருங்கோரை இனம், வேர் சிறிது நாற்ற முடையது. மருத்துவப் பயனுள்ளது.

குணாதிசயம்: பச்சையாக உள்ளபோது, வேர் இனிப்பாகவும், காய்ந்த பின்பு கார்ப்புச் சுவையும் உள்ளது வெப்பம் தரும். இசிவு அகற்றும், கோழையை அகற்றும். உட்சூடு, கண்ணோய், இரைப்பு ஆகியன இதன் வேரினுல் நீங்கும். சூதக வலி, வலிப்பு, ஆகியன நீங்கும்.

## சணப்பு

வேறு பெயர்கள்: சணல்

ஆங்கிலம்: Crotalania Junacea—Bengal Hemp

தெலுங்கு: ஜனபா, கன்னடம்—ஷனபு

மலேயாளம்—புலிவன்ஜி

விபரம்: வங்காளம், மைசூர், மற்றும் தக்கணப் பீடத்தில் விளையக் கூடியது.

குணாதிசயம்: கைப்புச் சுவையும், கார்ப்புச் சுவையும், உடையது. வெப்பம் தரக்கூடியது. வாந்தியுண்டாக்கும். இதன் இலே, விதை, வேர் ஆகியன மருத்துவப் பயன் உடையதாகும். இளங்கர்ப்பம் கரையும். சூதகக் கட்டை உடைக்கும், இதன் விதையை நல்லெண்ணெயுடன் காய்ச்சித் தலேக்குத் தடவிட மயிர் வளரும்.

## சண்பகம்

வேறு பெயர்கள்:—ஆங்கிலம்: Michelia Champaca.

தெலுங்கு: சம்பகமு; மலேயாளம்—சம்பகப் பூ

கன்னடம்: சம்பக ஹுவ்வு

விபரம்: இந்தியா முழுமையும் வளரும் மரம். இதன் மணமுள்ள மலர்களே ஆலயத்தில் வழிபாட்டிற்கு பயன்படுத்துவார்கள். கோவில் களில் சாதாரணமாக வளர்க்கப்படும்.

குணாதிசயம்: இதன் சமூலம் பயன்படுகிறது. கைப்புச் சுவையும். வெப்பம தரக்கூடியதாகும். சமூலம் உள்ளழல்களே ஆற்றும். பசியை உண்டாக்கும். சிறுநீரைப் பெருக்கும். இதன்பூ, கண்களில் வரும் அழலேப் போக்கும் பட்டை, உடலுக்கு வலிமை தரும். இதன் விதையிலிருந்து எடுக்கும் எண்ணெயை வயிற்றின்மீது தடவிட வலி நீங்கும்.

(தொடரும்)

# நோயும் - தன்மையும்

க. வேங்கடேசன், B.Sc., M.A.,

## குழந்தைப் பிணிகளில் சில

### குழந்தைகளின் இரைப்பு நோய் :

பிறந்த குழந்தை 5 வயது வளரும்வரை வரக்கூடிய பல்வேறு நோய்களைப் பற்றியும் அதனைத் தீர்க்கும் வழிமுறைகளையும் 'குழந்தைப் பிணிகளும் மூலிகை மருத்துவமும் என்ற எமது வெளியீட்டு நூலினைப் படித்துணரவும்.

குழந்தை பிறந்த 10-வது மாதத்தில் பல் முளைக்க ஆரம்பிக்கும். அப்போது குரல் வளையில் உள்ள துவாரம் இசிவு கொண்டு, அதனால், சுவாசக் குழலின் துவாரம் சிறிதாகி, சுவாசக் குழலில் காற்று தடைப் படும் இதனால் சுவாசம் மிகவும் சிரமமாகும். குழந்தைக்கு மூச்சு முட்டிக்கொண்டு திடீரென்று திணற ஆரம்பிக்கும். இங்ஙனம் குரல் வளையின் வழி செல்லும். கதிர்போன்ற ஸ்பரிச நரம்பு இசிவுகொள்ளும் போது இந்த நோய் வரும்.

### இந்நோய் தீர

இந்நோய் தீர—குழந்தைக்கு 1 முறை பேதிக்குக் கொடுத்தல் வேண்டும். பிறகு மாந்தக் குளிகை ஒன்று கொடுத்துவர, குரல்வளை நோய் தீரும். குழந்தையும் நலம் பெறும்.

### மாந்தம் — நோய் தாக்கும் பகுதி :

இந்த நோய் பெரும்பாலும் 1 வயது கடந்த குழந்தைகட்கு வருவதுண்டு. சுவாசக் குழல் தாபிதம் அடைவதால் குரல்வளை வியாபிக்கும். தாபித்த இடத்தில் புதியதாக மெல்லிய சவ்வு உண்டாகி- மாந்த நோய் உண்டாகும். சுவாசக்குழல் கிளைகளில் இந்நோய் பரவி, உப்புசமும், தளர்ச்சியும் மூச்சடைப்பும் காணும். இறுதியில் இதயத்தில் இரத்தம் கட்டிக்கொண்டு, குழந்தையின் மரணத்திற்கு காரணமாகிவிடும்.

### குறி குணம்

இந்நோயின் ஆரம்பத்தில், மூக்கில் நீர் வடியும். இருமல் உண்டாகும குரல் கம்மல் ஏற்படும். நீண்ட உறக்கம் ஏற்பட்டு, கண் சிவக்கும். லேசாகக் காய்ச்சலும் தோன்றும். மூன்று நாட்கள் இங்ஙனம் ஆன பின்பு இருமல் தீவிரமடைந்து, குழந்தை இருமினால் 'கொல், கொல்'லென்று வெண்கலத்தின் சத்தம்போல் கேட்கும். தொண்டை கரகரப்புடன் எரிச்சலும் தோன்றும்.

சுவாசிக்கும்போது, 'கர் கர்' என்று இசிவுபோல் சத்தம் கேட்கும். வாயைத் திறக்கச் செய்து பார்த்தால் உள்ளே இருக்கும் கோளங்கள் வீங்கியும், சிவந்தும் இருப்பதைக் காணலாம். அத்துடன் உள்நாக்கும் வீங்கி இருக்கும். வியாதி தீவிரமடையும்போது—காய்ச்சல் அதிகமாகும். மூச்சு விடுவதற்கு கடினமாகும். நாடி நடை தணியும். இருமல் அதிகமாகும். குழந்தை நாளாக ஆக வாடும். எப்போதும் அழுதுகொண்டே இருக்கும். தூக்கம் அற்றுப்போய் விடும். கழுத்து நரம்புகள் பலவீனமடைந்து தொங்கிவிடும். இரவில் இந்நோய் அதிகரித்து — பகலில் தணியும். இருமல் தணிந்து காணுமேயானால், இந்நோய் தீரும். பல்லிருகிக் காணுமேயானால், நோய் தீவிரமுற்று வியர்வை பெருகி, அடிக்கடி இசிவு காணும்,

### இந்நோய் தீர

மூக்கிரட்டை, தூதுவளை, கற்பூரவல்லி ஆகியவற்றை அடிக்கடி சேர்ப்பதுடன், கற்பக மிளகுப் பொடி, கோரோஜனை, மாத்திரைகளையும் அடிக்கடி முறைப்படி பயன்படுத்த வேண்டும். கோழை சேராமலும், அடிக்கடி நெஞ்சில் சேரும் கோழையை வெளியேற்றியும் வந்தால், இந்நோயைத் தடுக்கவும், தீர்க்கவும் இயலும்.

## கக்கிருமல்

இரண்டு வயது முதல் 10 வயதுள்ள குழந்தைகளை வெகு சுலபமாகப் பீடிக்கக்கூடிய நோய் கக்கிருமல். இந்த நோயைப்பற்றி அகத்தியர் குறிப்பிடுகையில்,

தன்மையுடன் சக்குவாய் இருமல் கேளாய்
தாரணியில் பாலருக்குக் காண்பதுண்டு
உண்மையாய் ஒரு தரமே காணுமல்லால்
ஒருக்காலும் மறுபடியே காணாதய்யா''

என்று குறிப்பிடுகின்றார்

### நோயின் ஆரம்பம்

இக்கக்கிருமல் முதலில் லேசாகக் காய்ச்சல் தோன்றும் வாந்தியும் குமட்டலும் ஏற்படும். சலதோடம் மாதிரியாக உருவெடுத்து இருமலாகி தொடரும்.

இங்ஙனம் தொடரும் இருமல், இருபத்தியொரு நாட்கள் விட்டு விட்டு வந்து தீரும் 21 நாட்களுக்குள் இந்நோய் தீராவிட்டால், மூன்று மாதங்கள் வரை நீடித்துத் தொல்லை தரும். நரம்புகளில் வேகம் காரணமாகத் தோன்றும் இந்நோய் முதல் இருபது நாட்களில் இருமலாகவே காணும். பிறகு, ஓயாத இருமலாகி, மூச்சுத் திணறல், கண்கள் இரண்டும் பெருத்துக் காணும். அப்போது சுவாசக் குழல், கீழாகி இருப்பதால், சுவாசம் உள்ளே புகும்போது—குழந்தைகட்கு இழுப்புமாதிரி வரும். தொண்டையில் மூச்சுத் திணறலில் சத்தம் எழுந்து ஏங்கல் போல் தோன்றும். இந்த கக்கிருமல் குழந்தையை வாட்டி எடுத்து விடும். சில வேளைகளில் வாந்தி வரும். அதில் கோழை வெளியேறும்.

### கக்கிருமல் தீர

சிறுவர்களை இருமலில் சிக்கவைத்து சீரழிக்கும் 'கக்கிருமலை' சீரழித்து—குழந்தைகட்கு நலமளிப்பது—தூதுவளை கிருதம் ஒன்றே.

தூதுவளை கிருதம் செய்முறையை அடுத்துவரும் மருந்து செய்முறை' பாடத்தில் காணலாம்.

## இளம்பிள்ளை வாதம்

வாதத் தொடர்புள்ள இந்த நோய், இளம் குழந்தைகளைப் பற்றும் போது—இளம்பிள்ளைவாதம் எனப்படும். வலிமையுள்ள கால்கள் இரண்டையும் அசைவற்றுப் போமாறு செய்தலே இந்நோயின் தன்மை.

### குறி குணங்கள்

இந்த நோய் ஆரம்பத்தில், பாதமிரண்டிலும், திமிர் ஏற்பட்டு, சுரணை அடியோடு கெட்டு உணர்ச்சி படிப்படியாக குறைந்துவிடும். மூத்திரப்பை, குதம் ஆகியனவும் அசைவற்று மல்லாந்து படுத்துக் கொள்வதில் நோயாளி நாட்டமாயிருப்பான். மூத்திரம் சிறிது சிறிதாக இறங்கும் துர்நாற்றமும் அடிக்கும். இரவில் சதைப் பகுதிகளில் துடிப் புண்டாகும். உறக்கம் சரிவர வாராது.

### நோய்க் காரணம்

முள்ளம் தண்டுக் கொடிக்கோ அல்லது அதனையொட்டியுள்ள சவ்வுக்கேனும் தாபிதம். ஏற்படுமானல் அல்லது காயம் ஏற்படுமே யானல் இந்த நோய் வருவதுண்டு குறிப்பாக 'சிசேரியன்' எனப்படும் அறுவைச்சிகிச்சையில் பெறும் குழந்தைகட்கு. ஆரம்பத்தில் சன்னிபோல் தோன்றி இறுதியில் இளம்பிள்ளை வாதமாகிறது என்பது நேரில் கண்ட உண்மை நரம்புகளுக்கு ரத்த ஓட்டம் அதிகமாக்கினுல் அதிர்ச்சியுடன் இசிவு தோன்றி கொருக்கு வலி, சதை அடித்துக்கொள்ளுதல் ஆகியன தோன்றும்.

### இந்நோய் தீர

அயச் செந்தூரம், திரிகடுகு சூரணம் அனுபானமாகக் கொண்டும், லிங்கமாத்திரை கொடுத்தும் வர குணம் காணலாம் என்பார் அகத்தியர்.

## கணை நோய்

இளம்பிள்ளை வாதம் போன்றே இளம்பிள்ளைகளின் நலனழிக்கும் கொடிய நோய் கணை நோய். மணக்குடலினைத் தாக்கும் ஒருவித நோய்க்குக் கணை நோய் என்று பெயர். உதிரச்சயம் என்றும் வேறு பெயரிடலாம். மணிக்குடலில் கிரந்திப் புண் ஏற்பட்டு அதனல் உண்டாகும் இந்நோய். பெரும்பாலும் 5 வயதுக்குட்பட்ட பாலருக்கு ஏற்படுவதுண்டு. வயிறு பெருத்து கல்லுப்போலாகும். கால்கள் இரண்டும் முடக்கிக்கொண்டு வயிற்றை அணைத்துக்கொள்ளும். உதடுகள் சிவந்து காணும். வாயோரம் புண்கள் உண்டாகும். உதடுகளில் வெடிப்பு தோன்றும் பேதி உண்டாகும், துர்வாடை அடிக்கும், வயிறு பெருத்து பீகுவாய்த் தோன்றும். சாப்பாடு சரிவர சாப்பிட இயலாது. உடல் இளைத்துவிடும். நாளுக்கு நாள் இரத்தம் குறைதலால் உடல் வெளுத்து பலவீனம் அதிகமாகும். இந்நோய் இறுதியில் குழந்தைகளைக் கொன்றுவிடும் தன்மை உடையது.

இந்நோய்க்குரிய மருந்தை—நோயும் மருந்தும் பகுதியில் காணலாம்.

# அனுபவம் உணர்த்தும் உண்மை

## நேத்திரப் பூண்டுத் தைலம்

உயர்திரு ஏ. ஆர். கண்ணப்பர் அவர்களுக்கு,

ஐயா, நான் தங்களிடம் மூன்று மாதங்கட்குமுன் நேத்திரப்பூண்டுத் தைலம் வாங்கி பயன்படுத்தி வந்ததில், கண்ணில் நீர் வடிதல், நின்று இரவில் ஓரளவு தெளிவாகப் படிக்கும் சக்தியும் கண் கூசுதல் நீங்கி, கண் விழியில் ஏற்பட்டிருந்த பூ மறைந்தும் வருகிறது. எண் சாண் உடம்பிற்கு சிரசே பிரதானம். அந்த சிரசிற்கே அணிகலனுய் கண்ணிற்கு ஊறு விளைவிக்கும் தீமைகளை அகற்றி பார்வை பெறச் செய்யும் தங்கள் பணி தொடரட்டும். தங்களுக்கு எல்லாம் வல்ல இறைவன் நீண்ட ஆயுளைத் தருமாறு பிரார்த்திக்கின்றேன்.

இப்படிக்கு
**எஸ். சுப்பிரமணியன்**
**Librarian, Sathyamangalam**

ஐயா, நான் தங்கள் சந்தாதாரர். தாங்கள் அளித்த நேத்திரப் பூண்டுத் தைலம் உபயோகித்ததில், என் தாயாருக்கு நெடு நாளாக இருந்து வந்த தலைக்குத்துவலி அடியோடு நின்று விட்டது பார்வையும் தெளிவாகத் தெரிகிறது. இன்னொரு பாட்டில் நேத்திரப் பூண்டுத் தைலம் அனுப்பவும்.

இப்படிக்கு
**B. Ramadurai, B.Sc.,**
**Junior Chemist,**
**Mettur Chemicals,**
**Sankaridurg Salem (Dt.)**

மதிப்புமிகு ஐயா,

வணக்கம் பல. நான் தங்களிடம் சென்ற பிப்ரவரி மாதம் என் கண் பார்வை மங்கலுக்கு சென்னைக்கு வந்து தங்களின் அற்புதப் படைப்பான நேத்திரப்பூண்டுத் தைலம் வாங்கி உபயோகித்தேன். பிரபல கண் மருத்துவர்களால் குணம் செய்ய முடியாத எனது வலது கண் பார்வையை, கிட்டதட்ட முக்கால்வாசிச்கு பார்வைத் தெரிய வைத்த தங்களின் பாதாரவிந்தங்களைப் பணிகின்றேன். 'ஈல்ஸ்' என்றழைக்கப் படும் இரத்தக் கசிவு ஏற்பட்ட என் வலது கண் பார்வை தற்சமயம் எவ்வளவோ முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. நன்றி.

இப்படிக்கு,
**N. கண்ணன்**
35, எல்லையம்மன் சன்னதி
திருவாரூர் 610 108.

# இதய ஒலி

அன்புள்ள ஐயா,

தங்கள் மகன் க. வேங்கடேசன் அவர்களிடம் என் மகனுக்கு அடிக்கடி வரும் இழுப்பு நோய்க்கு மூன்றுமாதம் மருந்து சாப்பிட்டதில் முக்கால்வாசி உடல் குணமடைந்திருக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிக்கு,
P. K. J. Abdul majeed
Jamalia St.,
Valoothoor P.O.
Tanjore (Dt.)

அன்புள்ள, மருத்துவர் அவர்கட்கு, வணக்கம். நான் உங்கள் சந்தாதாரர். என் கணவருக்கு குன்ம வயிற்றுவலிக்காக, நேரில் வந்து மருந்து சாப்பிட்டதில் குணம் தெரிகிறது. வலி ஒன்றும் இப்போது வருவதில்லை. அதற்கு எங்கள் நன்றி.

இப்படிக்கு,
காந்திமதி,
W/o. V. கோபாலகிருஷ்ணன்
2, Sanar St.,
Old Suramangalam
Salem - 5.

அன்புள்ள மருத்துவர் அவர்கட்கு. சில நாட்களுக்குமுன் கடுமையான பல்வலியினால் அவதிப்பட்டபோது தங்களின் சந்ததாரர். திரு. K. சுப்பிரமணியன் செட்டியார், தங்கள் மூலிகைமணியில் உள்ள மருத்துவ முறைப்படி செய்து பார்க்கச் சொன்னார். அதன்படி செய்தேன். பல்வலி பூரணமாகக் குணமாகியது. இதன்பின் எனக்கு சித்த மருத்துவத்தில் பூரண நமபிக்கை ஏற்பட்டது. எனவே, தங்களின் மூலிகை ஆராய்ச்சி புத்தகங்களை எனக்கு அனுப்பவும்.

இப்படிக்கு,
A. சண்முகம்
2-18 பிள்ளைமார்த் தெரு,
நரசிங்கநல்லூர் P.O.
திருநெல்வேலி - 4.

உயர்திரு, கண்ணப்பர் அவர்கட்கு,

தாங்கள் தினமணி வாயிலாக வெளியிட்ட மூலிகை முறைகளை இங்கு பலருக்கு செய்து கொடுத்து, கையாண்டு பயன்பெற்று வருகின்றேன்.

K. ஜெயராமன்
டெய்லர், 44, ஆலங்காயம் ரோட்
திருப்பத்தூர் (N.A.)

மூலிகைமணி அச்சகத்தில் அச்சிட்டவர்: K. பாபு D.M.E. சென்னை-30.
வெளியிடுபவரும் ஆசிரியரும்: வேலூர் மருத்துவர்
ஆ. இரா. கண்ணப்பர் R.M.P. 7, அருளாம்பாள் வீதி,
தி'நகர் சென்னை - 600017.

Printed by K. Babu, D.M.E., at Mooligai Mani Press, Madras - 30. Editor and Publisher Dr. A. R. Kannappar R.M.P. 7, Arulambal St., T'Nagar, Madras - 17.